VOL. LXXVII. No. 7. JULY 1940.

# அருணோதயம்

# ARUNODAYAM

THE

TAMIL EVANGELICAL LUTHERAN JOURNAL

Published by the Church of Sweden Mission,
the Tamil Evang. Lutheran Church and the Danish Mission

சுவிசேஷத்தைப்பற்றி நான் வெட்கப்படேன்.
ரோமர் 1 : 16.

பொருள் அட்டவணை. பக்கம்.



PRINTED AT
JEGAM & Co., DODSON PRESS,
TEPPAKULAM, TRICHY.

1940

## மரண அறிக்கை

எங்கள் அருமை தகப்பனாரும் மாஜி அனந்தரெத்தினம் உபதேசியாரின் சிரேஷ்ட குமாரனும், உதகமண்டலம் முனிசிபல் ஆபீஸ் ரிட்டயர்ட் அக்கவுண்டன்டுமாகிய A. பாக்கியம் பிள்ளை அவர்கள், சில காலம் வியாதியாக இருந்து, கடந்த மேமீ 12உ பிற்பகல் 2 மணிக்கு வெகு அமைதலாக பரம இளைப்பாறுதலுக்குள் பிரவேசித்தார்கள். தமது மரணத்துக்கு 3 நாட்களுக்கு முன்னதாக திருவிருந்தின்பேரில் தமக்கு இருந்த வாஞ்சையை கனம் D. தியாபிலஸ் ஐயருக்குத் தெரிவித்து தமது குடும்பத்தாருடன் திருப்பந்தியில் பங்குபெற்றார்கள்.

தன்னுடைய ஜீவிய காலம் முழுவதும் பக்தியும், தாழ்மையும், பொறுமையும், சுறுசுறுப்பும், பச்சாதாபமும் உடையவராகவும், உதகமண்டலம் சுவி: லுத்தரன் ஆலயத்தில் 38 வருஷங்கள் கவுரவ உபதேசியாராக உண்மையாகவும், ஊக்கமாகவும் உழைத்து வந்ததை அறியாதவர் சிலரே.

அவர்களது சடலம் மறுநாள் 13உ திங்கட்கிழமை காலை 8 மணிக்கு உதகமண்டலத்திலிருந்து கோயமுத்தூர் கிறிஸ்துநாதர் ஆலயத்துக்குக் கொண்டுவரப்பட்டு, கனம் S. D. ஞானச்சரியம் ஐயரவர்களால், "நான் கர்த்தருடைய வீட்டிலே நீடித்த நாட்களாய் நிலைத்திருப்பேன்" சங். 23·6. என்ற வாக்கியத்தின்பேரில் வெகு ஆறுதலான துக்கப் பிரசங்கமும், ஆராதனையும் நடத்தப்பட்டு, தாம் பிரியப்பட்டபடியே, லுத். மிசியோன் உத்தான பூமியில் தமது தாயாரின் கல்லறைக்கருகில் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கம் செய்யப்பட்டது. வயது 68

(தந்திகள், கடிதங்கள் மூலமாய் எங்களுக்கு அனுதாபத்தைத் தெரிவித்துக்கொண்ட பந்துக்கள் நண்பர் யாவருக்கும் எங்கள் நன்றியைத் தெரிவிக்கிறோம்.)

A. P. சாமுவேல்,
அக்கவுண்டண்ட் ஸ்டோர்ஸ்,
கவர்ன்மென்ட ஹவுஸ்.

A. P. ராஜரேத்தினம்,
இம்பீரியல் பாங்கு,
கோயமுத்தூர்.

A. P. தாவீது, L.E.E.,
அஸிஸ்டன்ட் ஆப்பரேடர்,
பைக்காரா பவர் ஹவுஸ்.

A. P. மங்களம், கியாஷியர்,
கவர்ன்மென்ட் ஹவுஸ்,
உதகமண்டலம்.

---

## பரம அழைப்பு

எனது அருமை மனைவி நல்லம்மாள் அம்மாள் ஏறக்குறைய இரண்டு மாத காலமாக வீக்கவியாதியால் பீடிக்கப்பட்டுப் பலவித சிகிச்சைகள் செய்தும் குணமாகாமல் கடந்த மே-மீ 28-ந்தேதி காலை $2\frac{1}{4}$ மணிக்கு கர்த்தருக்குள் அமைதலாய் மோட்சத்தின் திட நம்பிக்கையோடு நித்திரை அடைந்தார்கள். அன்று மாலை $5\frac{1}{2}$ மணிக்கு சங். G. T. வேதமாணிக்கம் ஐயரவர்களால் திருவாரூர் லுத். மிசியோன் கல்லறை தோட்டத்தில் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கம் செய்யப்பட்டது. வயது 72

"என் வாயைத்திறவாமல் மௌனமாயிருக்கிறேன்; நீரே என்னில் தேவரீர் அதைச் செய்தீர்" சங். 39, 10.

திருவாரூர், 28-5-40. N. GNANAMUTHU, Pension Catechist




தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் பத்திரிகை

Edited by Rev. S. GNANAMANICKAM, &
Mr. G. T. WILLIAMS, B. A., L. T.

| No. 7 | ஜூலை | 1940 |
| --- | --- | --- |

## தியானம்

---

### பேசு, அமர்ந்திராதே

*வாருங்கள், நான் செய்த யாவற்றையும் ஒரு மனுஷன் எனக்கு அறிவித்தார்; அவரைப் பாருங்கள்; அவர் கிறிஸ்துதானோ என்றாள். யோ. 4, 29.*

சுவிசேஷத்தைப் பிரபல்யப்படுத்தின சமாரிய ஸ்திரீயின் வைராக்கியம் நம்மில் அநேகரை வெட்கப்படுத்தும். தாங்கள் எத்தனையோகாலக் கிறிஸ்தவராயிருந்தும், இந்துக்களுக்கு முன்பாக கிறிஸ்துவை அறிக்கையிடமாட்டார்கள். அவள் செய்தபடி செய்யமாட்டார்கள். கர்த்தராகிய இயேசுவின் வாக்கை ஒரே மணி நேரம் கேட்டவள் தன் ஊராருக்கு அதை அறிவித்தாள். வருஷக் கணக்காய் தேவ வசனத்தை வாசித்து தேவாலயத்தில் கேட்டு வந்திருக்கிற நாம் நமது இரட்சகரை அறியாதவர்களுக்கு முன்பாக அவரைப் பிரஸ்தாபிக்கிறோமா? சமாரிய ஸ்திரீ செய்ததெல்லாவற்றையும் இயேசுநாதர் அவளுக்கு அறிவித்தார்; அவர் நமக்குச் செய்தது எல்லாவற்றையும் நாம் அறிந்திருக்கிறோம். அதை ஏன் நாம் தைரியமாகவும் தாராளமாகவும் மற்றவர்களுக்குச் சொல்லாமல் இருக்கிறோம். கிறிஸ்துவின் வசனம் உண்மையோ அல்லவோ என்று வரவும் பார்க்கவும் புற

மதஸ்தரை வருந்தியழைக்க கிறிஸ்துவின் அன்பு நம்மை நெருக்குகிறதில்லையா? சுவிசேஷம் விசுவாசிப்பவனை இரட்சிப்பதற்கான வல்லமையோ அல்லவோ என்று அவர்கள் வந்து பார்க்கட்டும்.

நமக்கு முதல் முதல் சுவிசேஷத்தை அறிவித்த தேசத்தார் விசுவாசத்தையும் தேவ பயத்தையும் இழந்திருப்பது புறமதஸ்தருக்கு முன்பாகப் பெரிய இடறலே. ஆயினும் தேவ பயமற்ற ஜாதியின் நடுவிலும் பராபரனுக்கு உகந்த ஒரு ஜனமுண்டு என்பதை நாம் மறுக்கமுடியாது. ஒரு ஜாதி ஆண்டவனையும் தன் புண்ணியங்களையும் அறிவிக்கும்படி அழைக்கப்படாமல், தங்களை அந்தகாரத்தைவிட்டு ஆச்சரியமான வெளிச்சத்துக்கு வரவழைத்தவருடைய புண்ணியங்களை அறிவிக்கவேண்டும். திருச்சபையின் ஜெபத்தாலும் உதவியாலும் இவ்வேலை நடைபெறும். இவ்வேலையே சபையின் ஜீவனைப் பாதுகாக்கும்.

இரட்சகரை அறிந்தவன் அடுத்தவர்க்கு இவ்வறிவை ஊட்டவேண்டும். இரட்சிப்பு பெற்றவன் பிறரையும் இரட்சிக்கவேண்டும். நமது நாட்டில் சுவிசேஷ வேலையில் வெகு பாடுபட்ட மேல்நாட்டுப் புருஷரையும் ஸ்திரீகளையும், அவர்கள் அரிய பிரயாசத்தையும் பெரிய அன்பையும் ஒருபோதும் மறக்கக்கூடாது. அவர்கள் காட்டிய சுயவெறுப்பு, சிந்திய கண்ணீர், சாதித்த பொறுமை, விசுவாச வீரம், செய்த ஜெபம் தேவனை அறியாதவர்களுடைய உள்ளத்துக்குள் சுவிசேஷம் பிரவேசிக்க உபகரணங்களாயிருந்தன. இவ்வேலையை நாம் தொடர்ந்து நடத்துவதில் சமாரிய ஸ்திரீயின் வைராக்கியம் நமக்குள் அதிகரிக்க நமது அருமை இரட்கர் நம்மைத் தூண்டியருள்வாராக!

S. D. G.

———:———

## பத்திராதிபர் குறிப்புகள்

மிசியோன் ஸ்தோத்திரப்பண்டிகையை இம்மாதம் 9ம் தேதி கொண்டாடுவோம். முதல் சுவிசேஷ ஸ்தாபகர்கள் தரங்கைக்கு வந்து சேர்ந்த இத்தினத்தை நாம் ஒருபோதும் மறக்கமுடியாது. அவர்கள் துவக்கின ஊழியம் தென்னிந்தியாவிலுள்ள தமிழ் சுவிசேஷ சபைகளை உற்பத்திசெய்து, பரம்பச் செய்ததற்காக இத்தினத்தில் நாம் ஆண்டவருக்கு ஸ்தோத்திரம் செலுத்துவது நமதுமேல் விழுந்த கடமையாகும். மேனாட்டார் இனித் தமிழ் நாட்டுத் திருச்சபைக்கு உதவி செய்யமுடியாத காலம் வந்துவிட்டதாகத் தோன்றுகிறது. திருச்சபை ஊழியருக்கும், மிசியோனூழியருக்கும் இக்காலம் விசேஷித்த



ஒடுக்கத்தின்காலம். சபைகள் பூரண சுயாதீனத்துக்கு வரத் தங்களாலியன்ற உதவிபுரிய வேண்டிய காலமிது. ஊழியர் தியாகம் செய்ய நெருக்கப்படும் இக்காலத்தில், சபையார் உற்சாகத்துடன் சபைகளின் ஊழியத்தை ஆதரிக்க ஏவப்படுவார்கள். பணக்குறைவால் சுவிசேஷப் பிரபல்லிய முயற்சி குறைந்துவிடாமலிருக்கும்படி ஒவ்வொரு தனிக்கிறிஸ்தவர்களும் இது சம்பந்தமாகத் தங்களுக்குள்ள உத்தரவாதத்தை உணர்ந்து கொள்வதவசியம். மிசியோன் ஸ்தோத்திரப் பண்டிகையில் நாம் சுவிசேஷப் பிரபல்லிய ஊழியத்திற்கென்று உற்சாகமான காணிக்கைகளைச் செலுத்துவோமாக.

நமது சபைகளும் ஊழியரும் கலங்கித் தவித்துக்கொண்டிருக்கும் இக்காலத்தில் நமது அத்தியக்ஷர் மகாகனம் J. Sandegren சாஸ்திரியார் தமது மனைவியாரோடு Sweden தேசத்திலிருந்து புறப்பட்டு Russia, Persia முதலிய தேசங்களினூடே பிரயாணம் செய்து வருவதாகச் செய்தி வந்திருக்கிறது. இம்மாத அருணோதயம் வெளிப்படுமுன் அவர்கள் நமது நடுவே இருப்பார்களென எதிர்பார்க்கிறோம். அவர்களின் வரவு நமது சபைகளுக்கு விசேஷித்த ஆசீர்வாதத்தையும், சந்தோஷத்தையும் உண்டுபண்ணுமென நம்புகிறோம்.

———:———

## மாதர் பகுதி

பெதேஸ்தாவில் தேவனுடைய நடத்துதல்.

(தஞ்சாவூரில் சகோதரி லீதியா வேதநாயகம் அம்மாளின் தலைமையில் நடக்கும் ஸ்தாபனத்தின் பெயர் பெதேஸ்தா. அரு. பத்.)

"கர்த்தர் நல்லவர். அவர் கிருபை என்றுமுள்ளது." கடந்த ஒரு வருஷமாக கர்த்தர் அதிசயங்களைச் செய்கிறவராக பெதேஸ்தாவிலும் கண்டு அவர் நாமத்துக்கு தோத்திரம் செலுத்துகிறோம். முதலாவது கடவுளுடைய ராஜ்யத்தையும் அவருடைய நீதியையும் தேடுங்கள். அப்போது இவையெல்லாம் உங்களுக்குக் கூடக் கொடுக்கப்படும் என்ற ஆண்டவருடைய கட்டளையை முன்வைத்து ஆத்தும வளர்ச்சியில் தேறுவதே முதல் கடமையாகக்கொண்டு, பெதேஸ்தா வீடு நடைபெறுகிறது. பற்பல குடும்பங்களிலிருந்து வரும் அங்கவீனமான பிள்ளைகள், பலவிதமான மனோநிலை, குண வித்தியாசம், கிறிஸ்தவ அனுபவத்தோடு இங்கு வந்து கிறிஸ்தவ குடும்பமாக ஞான ஜீவியத்தில் தேர்ச்சியடைய பிரயாசைப்படுகிறோம். சில

பிள்ளைகளிடம் அப்படிப்பட்ட மாறுதலையும் கண்டு, கடவுளை ஸ்தோத்திரிக்கிறோம். சுயநயமாய்த் தங்கள் தேவைகளையே பெரிதாக எண்ணி ஜீவித்திருந்தவர்கள், மற்ற சகோதரிகளின் குறைவைக் கண்டு உதவி செய்யவும், அன்பைக் காட்டவும், அன்பை நன்றியோடு பெற்றுக்கொள்ளவும் கற்றுக்கொள்ளுகிறார்கள். நார் திரித்தல், பாய் நெசவு இன்னும் மற்ற வீட்டு வேலையைச் சுறுசுறுப்பாய்த் திறமையோடு செய்து சந்தோஷமாய் ஜீவனஞ் செய்ய வழியுண்டு.

அநேகருடைய அன்பின் ஈவுகளை நன்றியோடு பெற்று அநுபவித்திருக்கிறோம். பெரிய தொகையும், சிறிய தொகையும் அங்கீகரிக்கப்படுகிறது. பணம் மாத்திரமல்ல, முதல் விளைவின் நெல் மூட்டையும், பித்தளை பாத்திரங்களும், காய், கறி முதலியனவும், பிறந்த நாள் முதலிய நல்நாட்களில் விருந்துகளும், இன்னும் அநேக ஈவுகளும், ஊர்களிலிருக்கும் சிநேகிதரும் விசேஷமாக தஞ்சை கிறிஸ்தவர்களும் காட்டும் அநுதாபமும் பட்சமும் அதிகம். சகல ஆசீர்வாதங்களையும் கட்டளையிட்டு ஒரு வருஷமாக எங்களை நடத்தின பரம தகப்பன் இவ்வருஷமும் நடத்த சகல சகோதரரும் ஜெபிப்பதோடு, கர்த்தர் ஆசீர்வதித்திருக்கிறதற்கேற்ப இயேசுவினிமித்தம் இச்சிறியரையும் நினைத்து உதவிபுரியக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

தியாக்கோனி ஊழியத்தின் சார்பாக கிறிஸ்தவ ஊழியத்தின் பயிற்சி வகுப்பு கடந்த வருஷம் தஞ்சையில் நடைபெற்றது. எலிமென்டரி உபாத்திமைத் தொழில் பரீக்ஷை எழுதிய பெண்கள் ஐந்து பேர், சத்தியவேதம், திருச்சபை சரித்திரம், தியாக்கோனி சரித்திரம், மார்க்கங்களை ஒத்துப்படித்தல், முதலிய பாடங்களோடு, ஓய்வு நாள் பள்ளிக்கூடவேலை, கிராம சுவிசேஷ வேலை, வேதபாடம் கற்பித்தலிலும் பயிற்சி பெற்றனர். இப்பயிற்சி சாலையின் ஆசிரியர் சிறந்த கௌரவ ஊழியரான சபைகுரு, தஞ்சை மிஷனரி அம்மாமார்களும், பெண்பாடசாலையின் சில உபாத்தினிமாருமே. மேலும் மாணவிகள் திருப்பத்தூர் ஆஸ்பத்திரியில் நாலு மாதங்களாகத் தங்கி, முதலுதவி, வியாதியஸ்தரைப் பராமரித்தல் இவைகளைக் கற்று, ஊழியத்தின் மேன்மையை அறிந்துகொள்ளும் சிலாக்கியமும் பெற்றனர்.

சபைகுருவும், கனம் திலியாண்டர் ஐயரவர்களும், மாணவரைச் சகல பாடங்களிலும் பரீக்ஷை செய்து, பட்டமும் கொடுத்து, ஊழியத்துக்கு ஆதாரம் இயேசுவின் மேலுள்ள அன்பு என்ற பொருளின்மேல், "சீமோனே! நீ என்னைச்



சிநேகிக்கிறாயா? என் ஆட்டுக் குட்டிகளை மேய்," என்ற சுவிசேஷத்தை ஆதாரமாகக்கொண்டு பிரசங்கம் செய்து, ஊழியத்துக்கு ஸ்திரப்படுத்தினார்கள்.

இம்மாணவிகள் பூதலூருக்குச் சமீபத்திலுள்ள புதுப்பட்டியில் ஒரு வாரம் தங்கி சுற்றிலுமுள்ள எட்டு கிராமங்களில் சுவிசேஷவேலை செய்யும் சிலாக்கியம் கிடைத்தது. மருளவிழுந்த கிறிஸ்தவர்களும் நிர்விசார இந்துக்களும் கருத்தோடு சுவிசேஷத்தைக் கேட்கும் சிலர் மாத்திரம் உண்டு. கெட்ட குமாரன் சரித்திரத்தைக் கேட்ட இந்து ஒருவர், அக்கிராமத்திலுள்ள சீர்கெட்ட வாலிபனுக்கு அச்சரித்திரத்தைச் சொல்லி குணப்படுதலுக்கு ஏவினார். என் தம்பிக்குப்புத்தி சொல்லுங்கள், மருமகளுக்குப் புத்தி சொல்லுங்கள் என்று கேட்டுக்கொண்டவரும் உண்டு.

புதிதாய் லுத்தரன் சபையில் சேர்ந்திருக்கும் சபைகள் விசேஷித்த ஊக்கத்தைக் காட்டி, சில மணி நேரங்களாகத் தரித்து, வசனத்தைக் கேட்க ஆவலாயிருந்து, பல இடங்களில் தங்கள் நடுவே ஊழியஞ் செய்யும் ஆண்கள், பெண்கள் தேவை என்ற விருப்பத்தையும் வெளியிட்டனர். 'உங்கள் கண்களை ஏறெடுத்து, வயல் வெளிகளில் அப்போதே அறுப்புக்கு வெண்மையாயிருக்கிறது என்று பாருங்கள்.'

புதுப்பட்டியில் ஜனங்கள் மழைக்காக அங்கலாய்த்து, மெய்யான கடவுள் மழையைக் கொடுப்பார். நீங்கள் வேண்டிக்கொள்ளுங்கள் என்று கேட்கையில், "கர்த்தரோ துணையாய் கிரியையை நடப்பித்து பின் செல்லும் அடையாளங்களினால் வசனத்தைத் திடப்படுத்தினார்" என்று இன்றும் தம் மகிமையை விளங்கப்பண்ணி மழையைத் திரளாய் வருஷிக்கப்பண்ணி, 'இதோ சகல நாட்களிலும் உங்களுடனே கூட இருக்கிறேன்' என்ற வாக்கை நிறைவேற்றுபவராகக் கண்டோம்.

'வாக்குத்தத்தம் பண்ணினவர் உண்மையுள்ளவர்'.

Lydia VEDANAYAKAM.

---

## வாலிபர் பகுதி

### தேவ நடத்துதல்

ஒருநாள் ஒரு வாலிபன் பயங்கரமாய் தூஷித்துக்கொண்டு நின்றான். அவனுக்குப் பின்னால் நின்ற ஒரு பெரியார் அவன் தோளைத் தட்டி; வாலிபா, இப்போது நீ தூஷித்த மாதிரியே

ஜெபிக்கும் காலம் வரும் என்றார். தூஷணக்காரன் நகைத்தான். இதன் பிறகு பல வருஷங்கள் கழிந்தன. வாலிபன் மதுபானத்திலும் சூதாட்டத்திலும் காலத்தைப் போக்கினான். மோசம் செய்ததுக்காகவும் திருட்டுக்காகவும் அவன் கைது செய்யப்பட்டுப் பல காவல் கிடங்குகளிலும் கஷ்டப்படவேண்டியதாயிற்று. அவனை விடுதலை செய்த பிற்பாடு அவனுக்கு வேலை கொடுப்பார் எவருமில்லை. மறுபடியும் கள்ளர் சகவாசத்தில் பிழைத்துப் போலீஸார் கையில் அகப்பட்டு அநேக வருஷங்களாகச் சிறையில் இருக்க நேரிட்டது. சிறையினின்று தப்பியோட ஒரு சமயம் முயன்றதற்காகத் தனிக்காவலில் வைக்கப்பட்டான். அவன் கர்த்தருடைய வசனத்தின் பிரசங்கம் கேட்கவும் ஜெபிக்கவும் அதிகாரிகள் ஒழுங்கு செய்திருந்தார்கள். எனக்கு ஆகாயத்திலே பேசவும் பாதிரிகள் புத்தியைக் கேட்கவும் வெறுப்பாயிருக்கிறது என்று தன்னோடு வசனத்தைக் கேட்ட உடன் கைதிகளோடு பரிகாசமாய்ப் பேசினான். ஆராதனைக்குப் போனபோதெல்லாம் தெய்வ சத்தம் அவனைக் கலங்க வைத்தது; அவனோ கூருக்கு எதிராக உதைத்தான். வார நாட்களில் காவல் கூடத்தில் அவனைக் குருமார் தவறாமல் சந்தித்தார்கள்; அவனோ சத்தியத்துக்கு விரோதமாகவும் அதைப் பட்சமாய் அறிவிப்பவர்களுக்கு விரோதமாகவும் தன் உள்ளத்திலிருந்த கசப்பையும் பகையையும் வாய்க்கு வந்தபடி விளக்கினான். குருமாரோ அவனோடு அன்பான சம்பாஷணை செய்வதில் சலித்துப்போகவில்லை. அவன் வைக்கப்பட்ட ஒடுக்கமான அறைவாசமும் தன் மனம்போன போக்கில் நடக்கக் கூடாத நிலைமையும் காவலாளரின் கண்டிப்பும் வெகுவான தண்டனைகளும் உள்ளான போராட்டமும் எல்லாம் சேர்ந்து அவனுக்குக் கொடுமையான தலை நோவு ஏற்பட்டது; இது வரவர கொடுமையாகி, மூளை கெட்டுப்போயிற்று. வாரங்களாய் நித்திரை அற்று, அவன் ஜீவியம் அவனுக்குப் பெரும் பாரமாயிற்று. ஓர் இரவு அவன் தற்கொலை செய்துகொள்ளப் பல உபாயங்களை உத்தேசித்துக்கொண்டிருக்கும்போது அவனுக்கு முன்பாக ஒரு வயோதிபன் நின்றதுபோல் தோன்றிற்று, பல வருடங்களுக்கு முன் அவனைப் பார்த்து: வாலிபா, நீ இப்போது தூஷிப்பதுபோல நீ ஜெபிக்கும் காலம் வரும் என்று சொன்ன அதே விருத்தன் அங்கே நின்று அதே மாதிரி சொல்வதாகக் காதில் விழுந்தது. உடனே அவன் ஒருபோதும் நினையாதது நடந்தது; அவன் எதிர்க்கமுடியாத வல்லமை அவனை முழங்காற்படியிடச் செய்தது. கர்த்தாவே எனக்கு இரங்கும் என்று வாலிபன் தேவனை நோக்கிக் கூப்பிட்டான். அவன் தேகமெல்லாம் வியர்க்க விருவிருக்க, எழுந்து, படுத்துக்கொண்



டான். சிறிது நேரத்துக்கெல்லாம் நன்றாய் நித்திரை செய்தான். விடியற்காலையில் விழித்து எழுந்திருக்கவே, தலைவலியும் உள்ளத்தின் வேதனையும் நீங்கிற்று என்பதை உணர்ந்தான். இதோ ஜெபம் பண்ணுகிறான் என்று முந்தின தூஷணக்காரனைக் குறித்துச் சொல்லப்பட்டது (நட. 9, 11) இவனைக் குறித்தும் சொல்லப்படக் கர்த்தர் கிருபை செய்தார். S. D. G.

---

## ஒரு நாஸ்திக பால்ஷிவிக்கின் மனம் மாறுதல்

### ரஷ்யாவிலிருந்து வந்த ஒரு கடிதம் (தொடர்ச்சி)

ஒரு கிறிஸ்தவன் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குச் செல்லும்போது தன்னுடன் பத்திரமாயும் இரகசியமாயும் எழுதிவைக்கப்பட்ட ஒரு சிறிய சிபார்சுக்கடிதம் ஒன்றை எடுத்துச்செல்கிறான். இந்தக்கடிதத்தை மற்றக் கிறிஸ்தவர்கள் காணும்போது, மிகவும் மனமகிழ்ச்சியுடன் அவனுக்கு வேண்டிய ஆகாரம், துணிமணிகள், வேலை முதலியவைகளைக் கொடுத்து உதவுகிறார்கள்.

இவைகளை எல்லாம் மற்றவர்கள் காணும்போது, கிறிஸ்தவர்கள் ஒடுங்கி இருக்கிற இடம் தெரியாமல், யாதொரு கிரியையும் செய்யாமல் இருப்பதாக எண்ணுகிறார்கள். ஆனால் அப்படியல்ல. உயிர் அங்கே இருக்கிறது. நாளுக்குநாள் வளர்ந்து பலமடைகிறது. குருமார்கள் செய்யும் பிரசங்கங்கள், அவர்கள் படும் நிஷ்டூரங்கள் முதலியவைகளின் மதிப்பு இன்னதென்று இப்பொழுது அறிகிறார்கள். இவர்கள் தங்கள் இரட்சிப்புக்கென்று எல்லாக் கஷ்டங்களையும் அநுபவிக்கிறார்கள் என்று ஜனங்கள் அறிந்துகொள்ளுகிறார்கள். இப்பொழுது ஜனங்களில் ஆச்சரியமான மாறுதல்கள் நடந்துகொண்டிருக்கின்றன. கம்யூனிஸ்ட்களில்கூட அநேகர் கிறிஸ்தவ ஆராதனைகளில் பங்குபெற்று, தங்களுடைய குழந்தைகளையுங்கூட ஞான ஸ்நானம் பண்ணுவிக்கிறார்கள். ஒரு விசுவாசி எங்கே சென்றாலும் மற்ற விசுவாசிகளையும் காண்கிறான்.

கஷ்டங்கள் இன்னும் பயங்கரமாய் இருக்கிறது உண்மைதான். ஒவ்வொரு கிறிஸ்தவனுக்கும் "சடுதியான மரணம் நேரிடலாம்" என்னும் பயமுண்டு. ஒரு தேசாந்திரப் பிரசங்கியாரைச் சந்தித்து இவைகளைக்குறித்து நான் பேசியபொழுது, அவர் மிகுந்த அமைதியுடன் "உலகத்தில் உங்களுக்கு உபத்திரவமுண்டு, ஆனாலும் தைரியமாய் இருங்கள். நான் உலகத்தை ஜெயித்தேன்" என்று கிறிஸ்து மொழிந்த திவ்ய வசனத்தை உச்சரித்தார்.

கிறிஸ்துவின் பேரிலுள்ள விசுவாசம் எல்லாப் பயங்களையும் மேற்கொண்டுவருகிறது. கடந்த இருபது வருஷங்களில் அநேகர் தங்கள் ஜீவனை விடுத்தார்கள். அவர்கள் வீணாய் மரிக்கவில்லை. ரஷ்யாவில் கிறிஸ்தவ சபை ஒழிந்தது என்று தோன்றும். அநேக பட்டணங்களிலும் கிராமங்களிலும் கோவில்கள் இல்லை. ஆனால் எல்லா இடங்களிலும் இருதயமாகிய கோவில்களில் இருந்து ஜெபிக்கிறவர்கள் இருக்கிறார்கள். பிற்காலத்திய ரஷ்யா தேசம் ஒரு கிறிஸ்தவ தேசமாய் இருக்கும் என்பது என் கருத்து.

என் அன்பார்ந்த பெற்றோரே! நான் இப்பொழுது இத்தேசத்தின் மத்தியிலுள்ள ஒரு இடத்திலிருந்து இக்கடிதத்தை எழுதுகிறேன். இந்த இடம் கிறிஸ்துவின் வல்லமைக்குள்ளாகும் என்பது திண்ணம். இக்கடிதத்தைப் பெற்று இதன் சாராம்சங்களை அறிந்தபின் அதை உபயோகப்படுத்தி உங்களாலானமட்டும் இதிலடங்கிய செய்தியைப் பூராவாகவாவது, அல்லது அதின் சில அம்சங்களையாவது மற்றவர்களுக்குத் தெரியப்படுத்தும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

என் அன்புமிக்க பெற்றோரே! உங்களுக்கு என் அன்பான ஸ்தோத்திரம். இதுவரையிலும் என் ஜீவியத்திற்கென்று நீங்கள் செய்த அனைத்திற்காகவும் உங்களுக்கு என் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகிறேன். உங்களையும் நம் அருமைத்தாய் நாட்டையும் கடவுள் ஆசீர்வதிப்பாராக.

இப்படிக்குத் தங்களின் கீழ்ப்படிதலுள்ள மகன், பீற்றர்.

(Translated by Rev. H. A. Woxblom & Mr. V. Jacob)

———:———

## சத்திரம்

கண்போன்ற கணவனும், மணிபோலும் மனைவியும் மகிழ்ந்து வாழும் இடம் வீடு. பெருந்தகைய பெற்றோரும் நற்குணம் வாய்ந்த பிள்ளைகளும் களித்து வசிக்கும் இடம் வீடு. அன்றி பேயை மணந்த நன்மகனோ, கழுதைக்கு வாழ்க்கைப்பட்ட மனைவியோ இருக்கும் இடம் வீடல்ல, காடு, சுடுகாடு. பெற்றோரை அவமதிக்கும் பிள்ளைகளோ, பிள்ளைகளை நிர்ப்பாக்கியராக்கும் பெற்றோரோ உயிர் வாழும் இடம் கிரஹமல்ல, நரகம். அப்படியானால் வீடற்ற ஆண்டி தங்கும் இடம் எது? 'மடம்' என்பார் சிலர். மடத்தில் சட்டமுண்டு, திட்டமுண்டு, ஒழுங்குண்டு, கட்டுப்பாடு உண்டு, பிரதிக்கினை உண்டு, நிபந்தனை உண்டு. இது ஆண்டிக்குச் சரிப்படுமோ. மடம் ஆண்டியின் சிறைச்சாலை.



ஆண்டிக்கு வேண்டியது அன்றுடக அப்பம், கவலையற்ற ஜீவியம், சுயாதீன வாழ்வு! பொழுதுபோனால் தலைசாய்க்க இடம். வெய்யிலுக்குத்தப்ப நிழல், மழைக்குத்தப்ப கூரை. அரசன் வசிப்பது அரண்மனை, ஏழை இருப்பது குடிசை, ஆண்டி அமர்ந்தது சத்திரம். சத்திரமே ஆண்டியின் மனதுக்கிசைந்த மஹால்.

சத்திரம் பெரியோரிட்ட தருமம். இவ்வுலகத்தை அவர் விட்டுவிடத்து தமக்கு இருப்பிடங் கிடைக்க அவர் செய்த உபாயும் இது. தினையை விதைத்தவன் தினையை அறுப்பது இயற்கைப் பிரமாணமன்றோ? சத்திரங்கட்டினவனுக்கு சத்திரங் கிடைத்தால் அதிசயமோ? பரதேசியாயிருந்தேன், நீங்கள் என்னை ஏற்றுக்கொண்டீர்களென்று சத்திரங்கட்டிய சிலரைக் குறித்தாகிலும் சொல்லப்பட்டால் எத்தனை பாக்கியம்? "சிலர்" என்றேன். பலர் சத்திரங்கட்டும்போதே கடவுளோடு வார்த்தையாடுவார். கடவுள் சிலருக்குச் சொல்வார்: அப்பா, என்னோடு பேரம் பண்ணாதே, நான் கோமுட்டியல்ல; மற்ற சிலருக்கு: நீ எனக்குப் பிரசங்கஞ் செய்யாதே, நான் மூடனல்ல; மற்றுஞ் சிலருக்கு:—இது உன் கடமை என்று எண்ணினால் செய். கட்டாயமில்லை, பலருக்கோ: நீங்கள் உங்கள் பலனை அடைந்து தீர்ந்தது என்பார்.

சத்திரம் கட்டினவரைக் குறித்துப் பேசினேன். ஒரு நாள் கண்டதை நான் சொல்வேன். ஒரு பெரியவர் தன்னயமின்றி, பொது நயத்தையே நாடிக் கட்டினார் ஒரு பெருஞ் சத்திரத்தை. ஏழைகளுக்கென்று கட்டின சத்திரத்தில் தனவான்களும் கனவான்களும் வந்து நிறைந்தார். திடீரென வந்தார் கட்டினவர், ஏழையாக, வீடற்ற ஆண்டியாக. "நோ வேக்கன்ஸி" (no vacancy) என்றான் காவல்காரன்.

வீடுகட்ட கதியற்ற அகதிக்கு இடம் சத்திரம். அவ்வித ஏழை சென்றார் ஒரு சத்திரத்தில். சிப்பாய் இவரைத் துரத்தி தாசில்தார் இங்கே தங்கியிருக்கிறார் என்றார். தாசில்தார் வந்தார், ஏழைக்கு இடமில்லை. நெடும் பிரயாணக்காரர் தங்குமிடம் சத்திரம். தம்மூரை விட்டவர்க்கு வழியில் இனத்தார் யார், ஜனத்தார் யார்? எனினும் சத்திரத்தில் சகலரும் உற்றோர்தான், உறவோர்தான். அவர் தம்மில் தாமே உறவை நாடா விட்டாலும், பிரயாணி அந்த உலக பொருள் கொண்டு அவரைச் சிநேகிதராக்க வேண்டியதுதானே. பணம் என்னதான் செய்யமாட்டாது.

சத்திரம் என் வீடல்ல, உன் வீடல்ல. சத்திரத்தில் ஆயுள் பரியந்தம் இருக்கப்போகிறதுமில்லை. பின்னை வம்பேன், தம்

பேன். அன்புமொழிக்கு செலவு கொஞ்சம், வரும்படி அதிகம். புன்னகைக்கு விலையில்லை, வருமானம் மிகுதி. இது மெய்யானால் சத்திரத்தில் யாவரும் அன்பரே, இனத்தாரே.

சத்திரத்தில் பணங்காசு அதிகம் வைத்திருந்தால் நித்திரை பிடிக்காது. பணமென்றால் பிணமும் வாய் திறக்குமல்லவா. காசும் பையுமின்றி தம் பிள்ளைகளை வழிவிட்டனுப்பின ராஜகுமாரனை மறவாதீர். தகப்பன் சம்பத்தில் தன் பங்கை வாங்கி நிறைந்த பைகளுடன் தூரதேசஞ் சென்ற 'நல்ல குமாரனையும்' நினைத்துக்கொள்ளுங்கள். பையைச் சுமந்து, 30 வெள்ளி காசால் அதை நிரப்பி நெடும் பிரயாணஞ்செய்த புண்ணியவான் ஞாபகமும் இருக்கட்டும்.

பெட்டிகள் நிறைய உடுப்பு, வண்டி நிறைய சாமான்களோடு சத்திரம் வந்தார் பலர். எனினும் உண்பது நாழி, உடுப்பது நான்கு முழம். உலகத்தை அசைத்த பவுல் அப்போஸ்தலனிடம் எத்தனை அங்கி இருந்ததோ. அவருடைய தெய்வ குருவின் அங்கி எத்தனையோ.

ஒரு பேர் பெரிய ராஜா, குறையா செல்வக் குபேரன். எனினும் அவர் முகத்தில் மகிழ்ச்சியில்லை. உள்ளத்தில் களிப்பில்லை. இதை நிவிர்த்திக்க வைத்தியர் செய்த சகல முயற்சியும் வீணாயிற்று. கடைசியாய் வந்தார் ஒரு ஆண்டி. அவர் சொன்ன மருந்து: துக்கமின்றி, துயரமின்றி ஆனந்த ஆட்டமாடுகிறவனின் சட்டையை இவர் அணிந்துகொள்வாரானால் மகிழ்ச்சி தானேவரும் என்பது. ஊரெல்லாம் தேடினார், நாடெல்லாம் தேடினார். எங்கும் கிடைக்கவில்லை. குறையற்ற ஆனந்தம் படைத்தவனுமுண்டோ. மந்திரியோ நாட்டில் கிடையா ஆனந்தன் காட்டில் கிடைப்பானென்று காட்டில் தேடினார். ஆனந்த பாடல் மனமாற பாடுகிறவனின் சத்தங் கேட்டார். அவனிடஞ் சென்றார். அவருடைய அளவற்ற ஆனந்த செய்தி கேட்டார். அவருடைய சட்டையைக் கடனாகக் கொடுக்க வேண்டினார். ஐயையோ, அவருக்கு சட்டை இல்லை, அவனொரு மாட்டுக்காரன்.

சத்திரம் ஆண்டி கச்சேரி, அது ஆனந்த கச்சேரி, அதுவே அழுகை கச்சேரியுமாம்.

ஆம், சத்திரத்தை வீடாக்கினால் அழத்தான்வேண்டும், பாடுபட்டு ஜோடித்த தன் இடத்தை விட்டுவிட நேரிட்டால் யாருக்குத்தான் கண்ணீர் வராது. கஷ்டப்பட்டு சேர்த்த பணத்தைவிட்டு போம்போது யார்தான் அழமாட்டார். பிரயாசைப்



பட்டு பயிரிட்ட நிலங்களைவிட்டு செல்லுகையில் யார் மனந்தான் கலங்காது.

வந்த வரவை மறந்து-மிக்க-மாதர் பொன்பூமி மயக்கத்திலாழும், இந்த மயக்கை அறுக்க-எனக் கெந்தை மெஞ்ஞானவெழில் வாள் கொடுத்தான். ஆக, ஆண்டியின் அரண்மனை சத்திரம், உன் அரண்மனை எது அப்பா, எது அம்மா.

———:———

ஆண்டி

## திருச்சபை வர்த்தமானம்

———

### " முதுகுளத்தூர் சுவிசேஷப் பிரபல்ய படைமுயற்சி " ஒடுக்கக் கூட்டம்.

ஷை கூட்டம் மேமீ 4-ம்உ முதல் 7-ம்உ முடிய முதுகுளத்தூரிலுள்ள நமது குருவின் வீடுதியில் நடைபெற்றது. கூட்டத்திற்கு சங். R. R. கைத்தான் ஐயர், திரு. R. D. சாமுவேல் அவர்கள் விசேஷித்த உபன்னியாசர்களாக வந்திருந்தனர். உபாத்திமாரும் மாணாக்கருமாக சுமார் 20 பேர் பல்வேறு இடங்களினின்றும் வந்து கூட்டத்தில் உற்சாகத்துடன் பங்கெடுத்தனர். இக் கூட்டத்தின் முக்கிய நோக்கம் " கிறிஸ்தவனின் கிராமசேவை."

4-ம்உ மாலை 3 மணிக்கு கூட்டம் ஆரம்பமாயிற்று, அச்சமயம் திரு. தேவநேசன் கூட்டத்தில் பங்கெடுத்தவர்களை ஆசிகூறி அன்புடன் வரவேற்று கூட்டத்தின் நோக்கத்தைக் குறித்துப் பேசினார். ஒவ்வொரு நாட் காலையிலும் திரு. M. யாக்கோபு, மாணிக்கம், ஜெயராஜ், கிறிஸ்தியான் என்பவர்கள் முறையே, 'மகிமையின் ராஜா உட்பிரவேசிப்பார்', 'ஆத்தும ஆதாயத்தின் அவசியம்', 'ஸ்தோத்திரிப்பக்குரிய ஆண்டவர்', 'சகல ஈவுகளையும் ஈயும் சற்குரு' என்ற பொருள்களின்பேரில் பக்தி வினயத்தோடும் தக்க வேத உதாரணங்களுடனும் தியானங்களை நடத்தினர்! நாள்தோறும் காலை ஆகாரத்திற்குப்பின் மாறி மாறி திரு. தேவநேசனும், திரு. R. D. சாமுவேலும் கிறிஸ்துவின் மலைப்பிரசங்கத்தை ஆதாரமாகக்கொண்டு முறையே, ஷை " பிரசங்கத்தின்படி நாம் நடக்கமுடியுமா? கிறிஸ்துவின் வழி எட்டாத உன்னத நிலையில் இருக்கிறதா?, அது விகாரமானதா?, தற்கால பயங்கர யுத்தத்தை நாம் ஆமோதிக்க முடியுமாவென்றும்," கடவுள் நீதி, மனுஷ நீதி இவற்றின் வித்தியாசமென்னவென்றும், இறுதியில் தர்க்கத்தோடு கூடிய வேத ஆராய்ச்சிக் கூட்டங்களை நடத்தினர்.

மாலைதோறும் நடந்த "சந்தியாவந்தனையை," சங். R. R. கைத்தான் ஐயரவர்கள், 'மௌன தியானத்தின் மேன்மை', ஜெப ஜீவியத்தின் உன்னத நிலை,' 'சகோதர தத்துவத்தின் பலத்த சக்தி' சிலுவை என்ற பொருள்களின்பேரில் மனதுருகும் வண்ணம் வெகு உருக்கமாகவும், தெளிவாகவும் நடத்தினார்கள். ஞாயிறு (5—5—40) இன்று 'ஐக்கிய ஆராதனையை' திரு. தேவநேசன் அவர்கள் நடத்த, சங். கைத்தான் ஐயர் எசேக். 36 : 26,27ன் பேரில் இந்திய திருச்சபையின் தற்கால நிலையைக் குறித்துப் பேசி, கடவுள் தமது ஆவியை நமக்குத் தரவும், அவருடைய கட்டளையின்படி நாம் நடந்து அவருடைய நியாயங்களைக் கைக்கொண்டு அவைகளின்படி செய்யவும் நமது நடக்கையைப் பக்குவப்படுத்தவேண்டுமென்று போதித்தார்கள்.

பகற் போஜனத்திற்குப்பின் ஒவ்வொருநாளும் முறையே திரு. ஞானநந்தர், 'கிராமங்களில் தெய்வசேவை' என்ற பொருள்பேரில் சேவையின் அவசியம், சேவையாளர், செய்விக்கும் முறை என்ற பல தலைப்பின் கீழும், திரு. காபிரியேல் 'கிராமச் சுகாதாரம்' என்ற பொருளின்பேரில் கிராம ஜனங்களின் வசிக்குமிடம்; உடல், உடை உணவு இவற்றை அவர்கள் எப்படி போற்றி வாழவேண்டும் என்று நாம் கற்பிக்கவேண்டிய வழி வகைகளைப்பற்றியும், திரு. சாம்ஜான் ராஜா, 'கிராமத்தில் முதியோர் கல்வி' என்ற தலைப்பின் கீழ், இந்தியாவின் தற்கால நிலை, கிராம வாழ்க்கையின் மேன்மை, கிராமக் கல்வியின் அவசியம், கற்பிக்கவேண்டிய நவீன சுருக்கவழி என்ற விஷயங்களை மாதிரிப் பாடம் கொடுத்து தங்கள் உபந்நியாசங்களை நன்கு நடத்தினர்.

ஒடுக்கக் கூட்டம் நடந்த நாலுநாட்களின் ஒவ்வொரு மாலையிலும் கூட்டத்தினர் பல பகுதிகளாகப் பிரிந்து, பக்கத்துக் கிராமங்களுக்குச் சென்று தெருப் பிரசங்கங்கள் மூலமாக சுவிசேஷ செய்தியை அறிவித்தது மன்னியில், "கிராமபெட்டி" (Gramaphone) யை உபயோகித்தும் சிறுவர்க்கேற்ற சிறு கதைகள் பல சொல்லியும், பாலர்களுக் கேற்ற பல பாட்டுகள் பயிற்றுவித்தும், கீர்த்தனைகள் கற்பித்தும், தேகப்பயிற்சி அளித்தும் கிராமத்தாருக்கு உற்சாக மூட்டி, கிராமச் சீரமைப்பு, தேசிய விஷயம் இவற்றின்பேரில் தேவையான இடங்களில் சொற்பொழி வாற்றி கிராமத் தொண்டைச் செய்தனர்.

இக்கூட்டத்தை நன்மையும் செவ்வையுமாக முடியச் செய்த ஆண்டவரின் நாமத்திற்கு அனந்த ஸ்தோத்திரம்.

முதுகுளத்தூர்,<br>
18—5—1940.

SAM JOHN RAJA.



## சுவிசேஷத்தின் திருப்பணி

காலமறிந்து பிழையாதான் கோலமழிந்து குரங்காவான் என்னும் முதுமொழி தனிப்பட்ட ஆட்களைக் குறிப்பதாகமாத்திரம் இராமல் பலர் குழுமிய நாட்டையும் சங்கங்களையும் கூடக் குறிப்பதாயிருக்கிறது. இனிமேல் இந்தியாவிலுள்ள திருச்சபையானது காலத்தின் நிலைமையையும் போக்கையும் உற்று நோக்கி ஆண்டவன் திருச்சித்தத்தை நாடிக் கீழ்ப்படியாதே போனால் திருச்சபையின் எதிர்கால நிலைமை வருந்தத்தக்கதாயிருக்கும் என்பதில் ஐயமின்று. இந்தியாவில் கிறிஸ்துவின் திருநாமத்தையணிந்த ஒவ்வொரு ஆணும் பெண்ணும் சுவிசேஷத்தைப் புறமதஸ்தருக்கு அறிவிப்பது ஒரு முக்கியமான அம்சம். இதன் பொருட்டு தங்கள் உடல் பொருள் ஆவி மூன்றையும் ஒப்புக்கொடுத்தாலன்றி இந்தியா ஆண்டவரை உள்ளபடி கண்டடைவதற்கில்லை.

எனவே, இப்பயிற்சியை நம்மவருள் கொண்டுவரும்படி தோழர் ஆர். டி. சாமுவேலவர்களும், தோழர் சா. தேவனேசனவர்களும் இவ்வாண்டு வேனிற்கால விடுமுறை நாட்களைத் தெரிந்துகொண்டனர். இந்தப் பணிசெய்ய முதுகுளத்தூர் வட்டம் ஏற்ற இடமென்று கண்டு மேமீ 4உ நாங்கள் அவ்வூருக்குச் சென்றோம். ஆசிரியரும், மாணவரும், சுவிசேஷகருமாகக் கூடியிருந்தோம். தூர இடங்களிலிருந்து சிலர் வந்திருந்தனராயினும் அவ்வட்டத்திலுள்ளவர்கள் இப்பணியில் உற்சாகமாகக் கலந்துகொண்டது பாராட்டத்தக்கதாகும்.

முதல் மூன்று நாட்கள் சங். கைத்தானவர்கள் எங்களுடன் தங்கி ஆவிக்கடுத்த காரியங்களில் எங்களுக்கு உதவி செய்தது மிகவும் பிரயோசனமாயிருந்தது. 11ம் தேதி மட்டும் முதுகுளத்தூரை மத்தியஸ்தானமாகக்கொண்டு சுற்றிலுமுள்ள கிராமங்களில் சுவிசேஷத் திருப்பணி செய்தோம். பின்னர் 15ம் தேதி மட்டும் பேரையூரை மத்தியஸ்தானமாகக் கொண்டு அங்குள்ள கிராமங்களில் திருப்பணி செய்தோம். இப்பணிவிடையில் கடைசி மட்டும் பங்கெடுத்தவர்கள் 10 பேர்.

எங்களுக்கு வேண்டிய உணவை நாங்களே தயாரித்துக் கொண்டோம். பாத்திரம் கழுவுவது, தண்ணீர் எடுப்பது, பெருக்குவது, பரிமாறுவது முதலிய ஊழியங்களை நாங்களே முறைபோட்டு செய்தோம். இது எங்களுக்குக் கொஞ்சம் கஷ்டமாயிருந்தும், எத்திற வேலையையும் மதிக்கும் எண்ணத்தையும், சகோதர ஐக்யத்தையும் கொடுத்தது.

கிறிஸ்து பெருமானின் நற்செய்தியை அறிய நாட்டிற் பெரும்பாலர் அதிக அவாவுடனிருக்கின்றனர். அநேகர் சுவிசேஷப் பிரதிகளை வாஞ்சையுடன் வாங்கி வாசிக்கின்றனர். சுவிசேஷத்தை யறியாத பலகோடி மக்கள் இன்னும் இந்தியாவிலிருப்பது வருந்தத்தக்க காரியம். இவர்கள் நம் மீட்பரைக் கண்டடையாதிருப்பது எவ்வளவு நிர்ப்பாக்கியம்!

கிறிஸ்து பெருமானது திருநாமத்தை யணிந்து அவரை விசுவசிக்கும் யாவரும் இப் பெருந் திருப்பணியில் தருணம் வாய்க்கும் போதெல்லாம் பங்குபெற வேண்டுமென்று நாங்கள் ஆசிக்கிறோம்.

அழகியநல்லூர். ஞானனந்தன்.

---

### சீர்காழி வாலிபர் ஒடுக்கக்கூட்டம்

இவ்வருடம் ஜூன் மாதம் 3-5 தேதிகளில் சீர்காழி கிறிஸ்தவ வாலிபர், 7 மைல் தூரத்திலுள்ள திருமுல்லைவாசல் என்னும் கிராமத்தில் ஒடுக்கக்கூட்டத்திற்கென்று கூடினோம். இக்கூட்டத்தில் பங்குபெற்றவர்கள் 21. இக்கூட்டத் தலைவர்கள் சங். W. Graefe சாஸ்திரியார், சங்: J. அருள்தாஸ் ஐயர், ஈஸ்டர்ராஜ் பிரசங்கியார், திரு. T. P. சீனிவாசன் (Deputy Inspector, Shiyali range) திரு. ராஜரெத்தினம் (Thasildar of Shiyali) முதலியவர்கள்.

இக்கூட்டத்தில் பேசிய முக்கியபொருள் "ஊழியம் செய்தல்" என்பதே. உபந்நியாசங்கள் இதை ஒட்டி இரு பிரிவானது. கடவுளுக்கு ஊழியம் செய்தல், மனிதருக்கு ஊழியம் செய்தல். காலை தியானம், வேத ஆராய்ச்சி முதலியவைகள் இதன் சம்பந்தமாகவே யிருந்தன. மாலை வேளையில் பவிஞுசுகளாகக்கூடி கடவுளிடம் சபையின் ஊன்றக் கட்டுதல் என்ற கோரிக்கையோடு ஊக்கமாக ஜெபித்து சுவிசேஷ வேலையும் செய்தோம். வீராவேசத்தை உண்டு பண்ணும் பல கீதங்களைக் கிறிஸ்துவின் நாம மகிமைக்கென்று பாடினோம். இதை நடத்த பல்வகை உதவியை உற்சாகத்தோடு புரிந்த தாசில்தார் கனம் ராஜரெத்தினம் அவர்கள் அன்பு பாராட்டத்தக்கது.

"கர்த்தருக்கும், மனிதருக்கும், ஊழியம் செய்ய ஆயத்தப்படு, ஏனெனில் இதுவே பெரிய கற்பனை." இக்கூட்டத்தின் முடிவில் வாலிபர் கிறிஸ்துவின் முன்னிலையில் பல தீர்மானங்களைச் செய்தார்கள். அதில் ஒன்று 'சங்க ஸ்தாபனம்'. வாலிபர் ஒரு சங்கம் ஸ்தாபிக்கவேண்டுமென்று தலைவரை ஏவினர்.



அதன்படியே தலைவர் ஓர் சங்கம் ஸ்தாபித்து அச்சங்கத்திற்கு "கிறிஸ்தவ சிஷிய சங்கம்" என்ற பெயர் வைத்தனர். இச்சங்கத்துக்குத் தலைவர் எங்கள் சபை குருவே. வாரந்தோறும் வேத ஆராச்சி கூட்டம் நடத்துவதாகவும், சில மாதங்கழித்து சுவிசேஷ ஊழியம் செய்வதாகவும் பேசினோம். முடிவில் எங்கள் சபைகுரு ரோமர்: 12, 12-18 வாசித்து, ஜெபித்து ஆசீர்வாதங்கூற ஒடுக்கக்கூட்டம் முடிவுக்கு வந்தது. சா. ப. காலேபு.

---

# DANISH MISSION

Editor: REV. GNA. VEDAKAN, CUDDALORE N. T.

## பதிப்பாளர் குறிப்புகள்

யுத்தம் பரவும் என்று முன் சொன்ன விதமே, நியாய காரணமின்றி இத்தாலி ஜெர்மன் பக்கம் சேர்ந்து யுத்தத்தில் பிரவேசித்திருக்கிறது. இத்தாலி சண்டையில் பிரவேசிப்பது தேவசித்தம என்று ஏற்கனவே சொன்னோம். அபிசினியாவுக்கு விடுதலை கிடைக்க, இத்தாலி நொறுக்கப்படுவதும் ஆண்டவன் சித்தமாகவே இருக்கும். இதற்குள்ளாக இத்தாலிக்கு கப்பல் சேதமும், பிரிட்டிஷ் விமானங்களால் தரையில் சேதமும் உண்டாகியிருக்கிறது. இத்தாலிக்கு ஜெர்மன் உதவி அதிகமாகக் கிடைக்கும். மத்தியதரைக் கடலின் பிரிட்டிஷ் கப்பல் படையை சேதப்படுத்த ஜெர்மனியும் இத்தாலியும் சேர்ந்து உழைக்கும். என்றாலும், பிரிட்டிஷ் கப்பல் படையின் பலம் எதையும் மேற்கொள்ளும். ஜெர்மன் இத்தாலியா படைகள் எகிப்திலும், தெற்கே ஆப்பிரிக்காவுக்கும் பிரவேசிக்க அதிகப் பிரயாசைப்படும். கிழக்கே வரவும் பிரயாசைப்படும். இவைகளிலெல்லாம் இப்படைகள் அதிக நஷ்டப்பட்டு நாளடைவில் பலயீனப்படும் என்பதும் திண்ணம். ரத்த வெறிகொண்ட புலி, இன்னும் சிலதைக் கொல்லும் என்பதுபோல் ஜெர்மன் சர்வாதிகாரி இதுவரையில் பிடித்தவைகளில் திருப்திகொள்ளாமல் இன்னும் கிழக்கே பிரவேசிக்க முயற்சி செய்வார்.

* * * *

ஜெர்மன் ஜெய வீரராக, டென்மார்க், நார்வே, ஹாலண்டு, பெல்ஜியம், பிரான்ஸ் தேசங்களைப் பிடித்தபோதிலும், அவர்களுக்குத் தற்போது கடல் மார்க்கம் சிறிதேனும் கிடையாமல், அவர்களுடைய ஒரு கப்பலும் வெளியேறாமலும் பிறர் கப்பலும

வராமல் எவ்வித வியாபாரமும் நடக்காமல்தானிருக்கிறது. நாளடைவில் பிழைப்புக்குரிய செல்வாக்கு அவர்களுக்கும் பிடிபட்ட தேசத்துக்கும் குறைந்துபோகும். இன்னும் அவர்கள் சண்டையிலேயே ஈடுபட்டு பிரிட்டனையும் தாக்க முயற்சி மும்முரமாகும்போது இன்னும் அவர்கள் பலயீனப்படுவார்கள்.

* * * *

பிரான்ஸ் பிரிட்டனைவிட்டு முழுவதுமாய்ப் பிரிக்கப்பட்டார்கள் என்று சொல்ல ஏதுவில்லை. பிரிட்டிஷார் இவர்கள் சரணாகதியினிமித்தம் இளைத்துப்போனார்கள் என்று சொல்லவும் முடியாது. இதுவரையில் சண்டை பிரிட்டனுக்கு வெளியே நடந்தது. வெளியிடங்களில் போர் புரிவது அதிக கஷ்டம். பிரிட்டன், இனிதான் தேசத்திலிருந்தே முழு பலத்துடன் போர் புரியும். ஜெர்மன் படை, பிரிட்டனில் கால் வைப்பது லேசல்ல. அவர்கள் பலத்த விமானங்கள், குண்டுகளால் நஷ்டம் விளைவிக்கலாம்: ஆனால், பிரிட்டிஷ் விமானங்கள் சத்துவம் வாய்ந்தவை. இதோடு அமெரிக்கரின் வலுவான விமானங்களும் கனடாவில் அப்பியாசிக்கப்பட்ட விமான வீரரும் வந்து சேர்ந்துவிட்டார்கள். பிரிட்டிஷ் கப்பல் படை நாளுக்கு நாள் அதிகரித்து வலுவுடன் இருக்கிறது. பிரிட்டிஷ் சேனையும் $1\frac{1}{2}$ கோடிக்குமேல் வீரதீரத்தோடு காத்து இருக்கிறார்கள். பிரிட்டிஷாருடைய ஒற்றுமையும், திரள் சொத்தும், வீரதீர அபிமானமும், மந்திரிமாருடைய சக்தி வாய்ந்த ஆலோசனைகளும், பிரதம மந்திரி சர்ச்சில் பிரபுவின் தீர்க்க யோசனைகளும், சக்ரவர்த்தி ஜார்ஜ் அரசரின் தேவ பக்தியும், பிரிட்டிஷார் இப்போது அதிகமாய் கடவுள் பக்தி நிறைந்தவராயிருப்பதும், இஸ்ரவேலரைப்போல் தேவ ஜனமாக, எரிகோவை வீழ்த்தினதுபோல், ஜெர்மன் வீரதீர, மாயதந்திர துணிச்சலான மின்னல் வெற்றிகளை அழித்து, ராட்சதனின் அக்கிரமத்தை ஒழித்து உலகத்தைப் பெரும் விபத்திலிருந்து காப்பாற்றுவார்கள் என்றே எதிர்பார்க்கலாம்.

* * * *

ஜெர்மானியருக்கு வேண்டியது பிரிட்டிஷார் கவிழ்க்கப்படவேண்டுமென்பதே; அவர்கள் சொல்வதென்ன? "இதோ, நாம் $8\frac{1}{2}$ கோடி ஜனங்கள் நமது தேசத்துக்குள்ளேயே ஏன் அடைந்து கிடைக்கிறோம்? பிரிட்டிஷாரைப் பாருங்கள்! ஒரு சின்ன தீவிலுள்ள 5 கோடி ஜனங்கள்: அவர்கள் உலகத்தில் நாலில் ஒரு பங்கைக் கட்டி ஆளுகிறார்களே! 140 லட்ச சதுர மைல் விஸ்தீரணமுள்ள சாம்ராஜ்யம் அவர்களிடமிருக்கிறதே! பிரான்ஸைப் பாருங்கள்! 4 கோடி ஜனம், 50 லட்சம் சதுர



மைல் குடியேற்ற நாடுகள் உண்டு. சிறு ஹாலந்தைப் பாருங்கள்! 85 லட்சம் ஜனம், 8 லட்சம் சதுர மைல் உண்டு. நாம் மட்டும் ஏன் தரித்திரத்தில் உழலவேண்டும்! அவர்களைத் தோற்கடித்து, நாம் உலகத்தின் எஜமானர்கள் ஆவோம்" இதுதான் அவர்கள் கோஷ்டம், யுத்த வெறி!

* * * *

எவ்வளவோ நெருக்கடியான இந்நிலைமையில் கிறிஸ்தவ பக்தர்கள் "உலகத்தில் அக்கிரமத்தை அழித்து தர்மத்தை நிலைநாட்டவேண்டும்" என்று வாஞ்சையுடன் ஜெபிக்கவேண்டும். இது கடவுளால் நேசக் கட்சியாரைக்கொண்டு ஆகச் செய்வார் என்று நம்பிக்கையுள்ளவர்களாயிருக்கவேண்டும். ஜெர்மன் கொடுமைகளைத் தடுப்பதற்கு நம்மாலான முயற்சிகளைச் செய்யவேண்டும். விமானப்படையில் படித்த வாலிபர் சேரலாம். வீட்டு செலவுகளைக் குறைத்து, பணமுள்ளோர் யுத்த கடன் நிதியில் பணம் போட்டுவைக்கலாம். சபையின் அங்கங்கள் அதிகமாய் கொடுத்து ஏழைகளைப் பராமரிக்கலாம். யுத்த வளர்ச்சியையும் உலக சம்பவங்களையும் கவனிக்கிறவர்கள், உலகம் ஒரு புது அமைப்புக்குப் பக்குவப்படுகிறது—கிறிஸ்துவின் நீதி ராஜ்யம் ஸ்தாபிக்கப்படப்போகிறது என்று அவருடன் உடன் ஊழியராக இருப்போம்.

———:———

## செய்திகள்

யுத்த செய்தி. ஜெர்மன் படை அதிக பலத்துடனும் ஏராளமாயும் பெல்ஜியத்தில் பிரவேசித்ததை எதிர்க்க முடியாமல் பெல்ஜிய அரசர் லியோபோல்டு சரணாகதி அடைந்தார். பெல்ஜிய ராஜாங்கம், அரசர் செய்ததை ஒப்புக்கொள்ளாமல், சேனையில் ஒரு பாகம் நேச கட்சியாரின் பக்கமே நின்று போர்புரியும்படி விட்டனர். அரசர் பின்வாங்கியதின் பயனாக, நேச கட்சியாரின் பலம் அப்பக்கத்தில் குறையவும் ஜெர்மன் முன்னேற்றம் தீவிரமாகவும் நேர்ந்தது. இக்கால யுத்தத்தில், ஜெர்மன் படை அதி தீவிரமாய் பாய்ந்து சென்று இடங்களைப் பிடிக்க அவர்களுக்கு ஏராளமான ஆயுதம் தரித்த வண்டிகளும், ஈசல் கிளம்புவதைப்போன்ற போர் வீரரும், எதிரியைத் தாக்கும் காகக் கூட்டம் பறப்பதைப்போன்ற விமானப்படைகளும், கல் மழை பொழிவதுபோன்ற வெடி குண்டுகளும், நெருப்பு கக்கும் வெடிகளும், அதிக சத்துவமுள்ள பீரங்கிகள் நிறைந்துள்ள டாங்க் வண்டிகளும், யுத்தத்தில் எவ்வளவுபேர் மடிந்தாலும் கடைசி பட்டாளமாவது ஜெயம் கொண்டுவர வேண்டுமென்ற

யுத்த வெறியும் நிறைந்தவராக காணப்படுகின்றனர். ஜெர்மன் சைன்ய பலத்தை நேச கட்சியார் சரிவர முன்னால் கண்டு கொள்ளவில்லை.

பிளாண்டர்ஸிலுள்ள நேச சைன்யத்தை ஜெர்மானியர் சூழ்ந்துகொண்டதில், பிரிட்டிஷ் துருப்புகள் எவ்வளவோ தளவாடங்களை இழந்துவிட்ட போதிலும், பிரிட்டிஷ் படைகளில் பெரும் பகுதி, ஐந்தில் நாலு பங்குபேர்—அதாவது பிரஞ்சு வீரர்கள் உள்பட மொத்தம் $5\frac{1}{2}$ லட்சம் பேர் உயிருடன், இங்கிலாந்துக்கு, தரையிலும், ஆகாயத்திலும், கடலிலும் எதிரி ஓயாமல் தாக்கிக்கொண்டிருந்தும் பத்திரமாய்க் கொண்டுவந்து சேர்த்தது ஓர் அற்புதம் என்றே சொல்லவேண்டும். நேசப் படைகள் இங்கு பின்வாங்க ஆரம்பித்ததில் இறந்து போனவர்களின் தொகை சுமார் 30,000 இருக்கும். பிரான்ஸின் மேற்கு கடற்கரை முழுதும் ஜெர்மன் கை வசத்துக்குப் போயிற்று. பிரான்ஸின் வடபாகமும் அவர்கள் வசமாகி, தலை நகர் பாரிஸ் பட்டணமும் அதனைச்சுற்றிய பாகமும் பிடிபட்டது. பிரான்ஸ் தேசம் சரித்திரத்தில் பிரசித்திபெற்றது. 'மேனாட்டு நாகரிகத்தின் வளர்ப்புப் பண்ணையான தேசம்: சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்னும் தத்துவத்தை உலகத்துக்கு உபதேசித்த தேசம்: நெப்போலியன் முதலான மகா வீரர்களை ஈன்ற நாடு; ஹியூகோ, டுமோஸ், அனடோல் பிரான்ஸ், ரொமேன் ரோலண்டு முதலிய மகா ஆசிரியர்களை அளித்த நாடு. இத்தகைய நாடு இன்று அழிவுக்குள்ளாகி, ஜெர்மன் கைவசத்தினால் சுயாதீனத்தை இழந்து, பொருள் நஷ்டப்பட்டு, மக்கள் வீடு வாசலின்றி, போர் வீரர் ஒரு பாகத்தில் ஜர்மன் படையை எதிர்த்து வந்தபோதிலும் பின்வாங்கினவர்களாகவே எல்லா வற்றையும் எதிரி வசம் விட்டு திகைக்கின்றனர். பிரான்ஸை பிரிட்டிஷார் பக்கத்திலிருந்து பிரிக்க ஜெர்மானியர் தனி சமாதானம் செய்துகொள்ள வற்புறுத்துகின்றனர். பிரிட்டிஷார் தங்களோடு உறவில் இருக்க, ஒரே ராஜ்யமாயிருப்போம் என்று பேசிப் பார்க்கின்றனர். பிரான்ஸ் தேச மக்கள் ஜெர்மனியோடு ராஜியானபின் மக்கள் உயிர் வாழலாம்: ஆனால், இனி அவர்கள் ஆயுததாரிகளாக, ஒரு தனி ராஜ்யமாக இருக்கவே முடியாது. தங்கள் விமானப் படைகளையும் கடற் படைகளையும் ஒப்புக்கொடுத்து சுயாதீனமிழந்து குடியேற்ற நாடுகளையும் கைவிட்டு அவமானத்தோடு வாழவேண்டும். ஆக, பிரான்ஸ் தேச முழுமையும் ஜெர்மன் கைவசமாகிவிட்டதாகவே பாவிக்கலாம்.

நார்வேக்கு அனுப்பப்பட்ட பிரிட்டிஷ் சைனியம் திரும்பி வந்துவிட்டது. இனி நார்வேயில் போர்புரிவது வீண் நஷ்டம் தான் என்று, நார்வே அரசன் ஹேக்கன் தமது ராஜாங்க அதிகாரிகளுடன் இங்கிலாந்து வந்து சேர்ந்தார்.



யுத்தம் ஆரம்பித்தது முதல், இத்தாலிய அதிபதி ஸீனர் முஸோலினி "இதோ யுத்தத்தில் சேரப் போகிறோம், சேரவே போகிறோம்" என்று ஓயாமல் உளறிக்கொண்டிருந்தவர், ஜெர்மானியர் பாரிஸ் பட்டணத்தை பிடிக்கும் தருவாயில், நமக்கும் ஏதோ ஒரு பங்கு கிடைக்கட்டுமே என்று நேசக்கட்சியாருக்கு விரோதமாகவே போர்புரிய முன் வந்துவிட்டார். மத்திய தரைக் கடலிலுள்ள நேசகட்சியாரின் கடற்படை இருப்பிடங்களை விமானப்படையுடன் தாக்கி வருகிறது. ஆனால், மத்திய தரை பிரிட்டிஷ் கடற்படையும், வட ஆப்பிரிக்காவில் நிறுத்தப்பட்டிருக்கும் இந்திய, ஆஸ்திரேலிய துருப்புகளும் விமானங்களும் ஏற்கனவே இத்தாலியருக்கு அதிக நஷ்டத்தை உண்டு பண்ணி வருகிறது. இத்தாலியருக்கு சரித்திர காலத்தில் பிரிட்டிஷாரும் பிரெஞ்சுக்காரருக்கும் அநேக ஆண்டுகளாகவே கை கொடுத்தே வந்திருக்க இப்போது சமயம் பார்த்து ஜெர்மன் பக்கம் சேர்ந்து நேசகட்சியாருக்கு துரோகிகளானதை உலகம் பழிக்கின்றது.

ருஷியா பால்டிக் கரையோரத்திலுள்ள சிறு ராஜ்யங்களான லித்துவேனியா, லாற்றிவியாவுக்கு தனது துருப்புகளை அனுப்பி, தனது ஆதீனத்துக்குள் கொண்டுவந்திருக்கிறது. ஸ்பானியா நடுநிலைமை வகிப்பதாக சொல்லிக்கொண்டிருந்த போதிலும், ஸ்பானியா அதிபதி பிரான்கோ, இத்தாலி, ஜெர்மனி பேச்சுக்கே கட்டுப்படுவார்.

* * * *

ரயில் விபத்துக்கள். கடந்த மே-மீயில் அநேக இடங்களில் ரயில் விபத்துக்கள் ஏற்பட்டது. சென்னை-பங்களூர் வழியிலும், வடக்கே எல்லைப் புறத்திலும், திண்டிவனத்திற்கு அருகில் 4 மைல் தூரத்தில் மே. 28வ. பகல் $3\frac{1}{2}$ மணிக்கு சென்னையிலிருந்து வந்த வண்டி புயல் காற்றினால் புரட்டப்பட்டு, 4 பேர் மரணமடைந்து, 12 பேர் வரை காயமடைந்தார்கள். கலியாண காலமானதாலும், கப்பல் வந்த நாளானதாலும் பிரயாணிகள் நிறைந்திருந்தும், வண்டிகள் ஒன்றின்மேல் ஒன்று ஏறி மோதி சிறு பலகை துண்டுகளாக நொறுக்கப்பட்ட போதிலும் உயிர்ச்சேதம் குறைவாகவே இருந்தது தேவ செயல். நாம் நன்கு அறிந்த கூடலூர் நண்பர் ராவ் சாஹிப் பாக்கியநாதன் அவர்களும் அம்மாளும், மகளும் கவிழ்க்கப்பட்ட வண்டிக்குள்ளிருந்து காயமின்றி வெளியேறினது ஆண்டவருடைய கிருபையே!

சிதம்பரம் அண்ணாமலை சர்வ கலாசாலையின் உப அத்தியட்சகராக சர். K. V. ரெட்டி அவர்கள் நியமிக்கப்பட்டு, வேலை ஒப்புக்கொண்டிருக்கின்றனர்.

*   *   *   *

சாரோன் கிறிஸ்தவ முயற்சி சங்கம். சாரோன் கிறிஸ்தவ முயற்சி சங்க அங்கத்தினர்களுக்கு விசேஷித்த கூட்டங்கள் மே மாதம் 28உ முதல் 31உ வரை நடந்தது. ஆரம்ப கூட்டத்தில், சங். சேனு ரூபஸ் போதகர் ஆமோஸ் 3:3 வாசித்து பேதத்திலுள்ள வாலிபர்களைப்பற்றி பேசினார். தினம் காலையிலும் மாலையிலும் கடவுள் வணக்கம் சபையிலுள்ள பெரியவர்களால் நடத்தப்பட்டன. சங். சேனு ரூபஸ் போதகர் "யோனு" தீர்கதரிசன புஸ்தகத்தைப்பற்றி வேதபாட வகுப்புகளை நடத்தினார். 27உ ஈரோடு ஸ்ரீ M. சாமுவேல் "வாலிபரும் கிராம ஊழியமும்" எனபதைப்பற்றிப் பேசினார். 29உ "தற்கால சபைகளின் நிலை" என்பதைப்பற்றி ஸ்ரீ S. G. அருமைநாயகமும் "கிறிஸ்தவ முயற்சி" என்பதைப்பற்றி ஸ்ரீ மன்னு ஜேக்கப் அவர்களும் பேசினார்கள். அன்று மாலை பாடல் போட்டிப் பந்தயம் நடந்தது. பரிசுகளும் கொடுக்கப்பட்டன. 30உ காலை ஸ்ரீ A. G. சிகாமணி சங். 119 : 9 வாசித்து வாலிபர் தவறுதற்குரிய நிலைமையைப்பற்றிப் பேசினார். அன்று மாலை, "வாலிபரும் சபையும்" என்ற பொருளின்மேல் ஸ்ரீ G. மார்டினும், "வாலிபரின் தொண்டு" என்ற பொருளின்மேல், சங். G. ஞானசுந்தரம் ஐயரும் பேசினார்கள். 30உ காலை நாராயண வாமன் திலகர் சரித்திரம் ஸ்ரீ J. சிகாமணி அவர்களால் சொல்லப்பட்டது. அன்று மாலை சங். M. சாமிதாஸ் போதகர் "சபை ஐக்யத்தைப்" பற்றியும், சங். P. விஸ்வாசம் போதகர் "பிலிப்பியர் சபை" யைப்பற்றியும் பேசினார்கள். முடிவு கூட்டத்தில் சங். சேனு ரூபஸ் போதகர் பிலி 4 : 1-7 வாசித்து இக் கூட்டங்களைப்பற்றிப் பேசினார். இக் கூட்டங்களில சபையில் பலர் பங்கெடுத்தனர்.

[TITUS WINFRED, Secretary C. E.]

---

## புஸ்தகம் தேவை

தரங்கையில் சுமார் 60 வருஷங்களுக்கு முன் பிரசுரமான ஒருமிப்பு நூல் I பாகம் (Book of Concord I Vol.) உள்ளவர்கள் சிதம்பரம் லுத்தரன் மிசியோன் Mrs. I. Graefe அம்மாளுக்கு எழுதினால் தகுந்த விலை கிடைக்கும்.

# THE HIGHER AND TECHNICAL EDUCATION FUND

**Receipts and payments Account for the year ending 31st December, 1939.**

| RECEIPTS. | Amount. Rs. | A. | P. | PAYMENTS. | Amount. Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|---|---|
| **To Opening Balance :—** | | | | **By Office expenses :—** | | | |
| With Post Office Savings | | | | Stationery and postage 43—4—3 | | | |
| Bank Account 342-13—3 | | | | Travelling expenses 40-11—0 | | | |
| With the National Bank of | | | | Clerk—Salary 57— —0 | | | |
| India, Madras on current | | | | | 141 | 7 | 9 |
| account 859—5—4 | | | | ,, Loans issued .. | 1575 | 0 | 0 |
| With the treasurer of the | | | | , Court costs ... | 0 | 10 | 0 |
| Fund 284—8—7 | | | | ,, Bank charges .. | 3 | 1 | 0 |
| | 1486 | 11 | 2 | ,, Miscellaneous .. | 36 | 8 | 0 |
| ,, Subscriptions .. | 201 | 13 | 0 | ,, *Closing Balance :—* | | | |
| , Interest on loans .. | 317 | 5 | 2 | With the National Bank of India, | | | |
| ,, Loan Registration fees ... | 9 | 8 | 0 | Madras on current a/c. 1240—7—11 | | | |
| ,, Interest on Savings Bank Account .. | 5 | 3 | 1 | With Post Office Savings Bank | | | |
| ,, Loan Repayments ... | 1487 | 6 | 6 | Account 45—0—4 | | | |
| , Miscellaneous ... | 5 | 12 | 0 | With the treasurer of the | | | |
| | | | | Fund 471-7-11 | | | |
| | | | | | 1757 | 0 | 2 |
| Total | 3543 | 10 | 11 | Total | 3543 | 10 | 11 |

MADRAS, 13th March 1940.

Examined and Found Correct.

(Sd.) K. JOHN & Co.,
*Registered Accountants & Auditors.*

Registered No. M. 1979

## மரண அறிக்கை

கோயம்புத்தூர் (பாங்க்) மாஜி P. சாமுவேல் பிள்ளையின் நேச மனைவியாரும் எங்கள் அருமை தாயாருமாகிய ரேபேக்காள் அம்மாள் சில காலமாக படுக்கையிலிருந்து மிகுந்த பொறுமையுடன் தன் பாடுகளைச் சகித்து யாவரிடமும் அன்பும் பட்சமுமாக இருந்து ஜுன் 2ம் தேதி ஞாயிறு காலை 6 மணிக்கு கர்த்தருக்குள் அமைதலாக நித்திரை அடைந்தார்கள்.

துக்க வீட்டில் சங். D. S. ஞானச்சரியம் ஐயர் அப். 14. 22 "அநேக உபத்திரவங்களின் வழியாக" என்னும் வாக்கியத்தின் பேரில் ஆறுதலாக பிரசங்கித்து துக்கம் நிறைந்து நின்ற எங்களை அனைவரையும் ஆறுதல் படுத்தி ஜெபித்தபின் அவர்கள் சடலம் சகல கிறிஸ்தவ மரியாதையுடன் கோயம்புத்தூர் லுத்தரன் மிஷன் உத்தான தோட்டத்திற்குக்கொண்டு போகப்பட்டு உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கம் செய்யப்பட்டது. வயது 65.

சங். 73 : 24 உம்முடைய யோசனையின்படி என்னை நடத்தி கடைசியிலே என்னை மகிமையில் ஏற்றுக்கொள்வீராக. துக்கத்தில் எங்களுக்கு நேரிலும் கடித மூலமாகவும் ஆறுதல் சொன்ன யாவருக்கும் எங்கள் நன்றி சொல்லுகிறோம்.

| | |
|---|---|
| 37 opposite to<br>Govt. Hospital,<br>Coimbatore<br>9—6—40. | P. S. ஈஸ்வரதாஸ் பிள்ளை<br>P. S. ஆரோன் தெய்வசிகாமணி பிள்ளை<br>P. S. ஆதாம் தனராஜ் பிள்ளை<br>P. S. சுந்தரம் ஞானப்பிரகாசம் பிள்ளை |

## மரண அறிக்கை

எனது அருமை மனைவியும் காலம் சென்ற அருமை நாயகம் அவர்களின் மகளுமாகிய நேசமணி சமாதான அம்மாள் திருப்பத்தூர் ஆஸ்பத்திரியில் 3—6—40 அன்று பெண் குழந்தை பிரசவம் ஆகி, இருதய கோளாறினாலும், வீக்கத்தாலும் வாவா பலவீனமடைந்து 16—6—40 காலை 9½-மணிக்கு அமைதியுடன் கர்த்தருக்குள் நித்திரை அடைந்தது. அதன் சடலம் அன்று பகல் 3½-மணிக்கு நமது மிஷியோன் உத்தான தோட்டத்தில் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று சங் D. தாவீது ஐயரவர்களால் நல்லடக்கம் செய்யப்பட்டது. துக்கத்தில் உள்ளான எனக்கும், பின் விடப்பட்ட நான்கு பிள்ளைகளுக்கும், பந்துகள் யாவருக்கும் அமலன் ஆறுதல் அளிக்கும்படி ஜெபிக்கக் கேட்டுக்கொள்ளுகிறேன். வயது 30.

என் வாயைத் திறவாமல் மௌனமாயிருக்கிறேன். ஏனெனில் தேவரீர் இதைச் செய்தீர். சங். 39. 10.

| | |
|---|---|
| திருப்பத்தூர்,<br>Ramnad Dt. | P. அடைக்கலம்.<br>உபாத்தியாயர், சதுர்வேதமங்கலம். |

